Licensed to Post Without Pre-Payment Licence No G 61 N MS CPP 55    ANNA Leading Progressive Tamil Daily in the ...

# காவிரி நீர்: புரட்சித்தலைவர் முயற்சி விவரம்

Regd No. TN - MS [C] 244    420212    4 பக்கம் விலை 70 காசு

# அண்ணா

நிறுவனர்: எம்.ஜி.ஆர்

மலர் 11 சென்னை 10 9 87 வியாழன் வெளியூர் 11 9 87 வெள்ளி இதழ் 340

## தி.மு.க. பொய்பிரச்சாரம் தூள்தூள் ஆகிறது

சென்னை, செப். 10- காவிரி நீர் பிரச்சினையை தீர்க்க கழகஅரசு நடவடிக்கை எடுக்கவில்லை என்ற தி மு க வின் பொய் பிரச்சாரத்திற்கு பதிலடி தரும் வகையில் புரட்சித் தலைவர் அரசு என்னென்ன நடவடிக்கைகளை மேற் கொண்டுள்ளது என்பது குறித்து அமைச்சர் சாத்தூர் ராமச்சந்திரன் தெரிவித்துள்ளார்.

இதயம் பேசுகிறது பத்திரிகைக்கு அமைச்சர் சாத்தூர் ராமச்சந்திரன் அளித்த பேட்டி விவரம் வருமாறு:

கே: காவிரி நீர் பிரச்சினையைத் தீர்ப்பதற்கு கடந்த பத்தாண்டு காலமாக தமிழக அரசு தகுந்த முயற்சிகளை மேற்கொள்ளவில்லை என்று குற்றம் சாட்டப்பட்டுள்ளதே?

பதில்: காவிரி நீர் பிரச்சினையைத் தீர்க்ககடந்த பத்தாண்டுகாலமாக அரசு எந்த நடவடிக்கைகளும் மேற்கொள்ளவில்லை என்று கூறுவதுசரியில்லை.

காவிரி நீர் பிரச்சனையைத் தீர்த்து வைக்கும்படி தொடர்ந்து பத்தாண்டு காலமாக மத்திய அரசை நாங்கள் வற்புறுத்தி வருகிறோம்.

இது தொடர்பாக கர்நாடக அரசுடன் பல தடவை பேச்சுவார்த்தை நடத்தி இருக்கிறோம். மேலும் முதல்வர்கள் மட்டத்திலும் நீர்ப்பாசன அமைச்சர்கள் மட்டத்திலும் பேசப்பட்டுள்ளது. மத்திய நீர்ப்பாசன அமைச்சர் சங்கரானந்த் தலைமையில் முதல்வர்கள் கூட்டத்தில் நடந்த பேச்சுவார்த்தை ஒரு முடிவுக்கு வரமுடியாத சூழ்நிலையில் டிரிபியூனல் மூலம் தீர்வு காண கர்நாடக அரசு முன் வரத் தயங்குகிறது.

இப்படியே காலம் தாழ்த்திச் சென்றால்தான் காவிரி நீர்மூலம் பாசன வசதியை ஏற்படுத்தி அவர்களின் திட்டங்களை நிறைவேற்றிக் கொள்ளலாம். இதற்காகவே அவர்கள் கால அவகாசத்தை தேடிக் கொள்கிறார்கள்.

காவிரிக்குக் குறுக்கே அணை கட்டக் கூடாது என்று 1972ம் ஆண்டு அன்றைய தமிழக அரசின் சார்பிலும், தஞ்சை விவசாயிகள் சார்பிலும் உச்ச நீதிமன்றத்தில் வழக்குத் தொடரப்பட்டது. அப்போது முதலமைச்சராக இருந்த கருணாநிதி இந்த வழக்கைவாபஸ் பெற்றார். அதனால் விவசாயிகள் சங்கம் தொடர்ந்த வழக்கும் டிஸ்மிஸ்செய்யப் பட்டது. வழக்கை வாபஸ் பெற்றதற்காக கருணாநிதி சொன்ன காரணம். அப்போது பாரதப் பிரதமராக இருந்த இந்திரா காந்தி வழக்கை வாபஸ் பெற்றுக் கொள்ளுமாறு கேட்டுக் கொண்டதன் பேரில் வழக்கு வாபஸ் பெறப்பட்டது என்பதாகும்.

### கருணாநிதியின் நீலிக்கண்ணீர்

கருணாநிதி அரசின் முறைகேடான இந்த போக்குதான் இப்போதைய பிரச்சினைகளுக்கு மூலகாரணம். தமிழக விவசாயிகள் பாதிக்கப்படுவார்களே என்ற கவலை அவருக்கு அப்போது இருக்கவில்லை. மத்திய அரசுடனான உறவு பாதிக்கப்பட்டுவிடக் கூடாது என்பதுதான் அவரின் அப்போதைய கவலை. அவர் தான் இன்று தஞ்சை மக்களுக்காக கண்ணீர் வடிக்கிறார். ஆடு நனைகிறதே என்று ஓநாய் கண்ணீர் வடிப்பதுபோல!

இப்போது காவிரிக்குக் குறுக்கே கட்டப்பட்டிருக்கும் அணைக்கட்டிலிருந்து தண்ணீரை கர்நாடகம் நீர்ப்பாசனத்திற்குப் பயன் படுத்தி வருகிறது. கர்நாடக அரசு இதை மேலும் அதிகப்படுத்திக் கொள்ளத் தொடங்கி விட்டால் டிரிபியூனல் இதை காரணம் காட்டி நமக்கு நீர் விட மறுக்கலாம். அதற்குள்ளாக மத்திய அரசு தலையிட்டு ஒரு தீர்வு காண வேண்டும் என்று முதல்வர் புரட்சித் தலைவர் வலியுறுத்தி வருகிறார்.

கேள்வி: மேட்டூர் அணைக்கு 100 டி எம் சி தண்ணீர் விடுவதாக தமிழகத்திற்கும் கர்நாடகத்திற்கும் இடையே ஓர் உடன்பாடு ஏற்பட்டது. மேட்டூர் அணைக்கு வரும் 100 டி எம் சி நீரை எந்த விதத்திலும் கர்நாடகம் தடுக்கக் கூடாது என்றும் ஒப்புக் கொள்ளப்பட்டது. ஆனால் இந்த உடன்பாடு கையெழுத்தாவதற்கு முன்பு திமுக அரசு பதவியிலிருந்து நீக்கப்பட்டது.

கே: அதற்குபிறகு ஏற்பட்ட கவர்னர் ஆட்சியின் போது கர்நாடகத்திற்கு சாதகமான செயல்களே நடந்தது என்று கருணாநிதி கூறுகிறாரே?

பதில்: மேட்டூர் அணைக்கு எவ்வளவு டி.எம்.சி. தண்ணீர் விடுவது என்பது பற்றி தமிழ்நாட்டிற்கும் கர்நாடகத்திற்கும் ஏற்பட்டிருப்பதாக இவர் கூறும் இந்த உடன்பாடே கடந்த பத்தாண்டு காலத்தில் தஞ்சை மக்களைப் பற்றியும் காவிரிநீர்ப்பிரச்சினைப்பற்றியும் எவ்வளவு தூரம் மறந்திருக்கிறார் என்பதற்கு ஓர் எடுத்துக்காட்டு! கருணாநிதி கூறுவது போன்ற ஓர் ஒப்பந்தம் ஏற்படவே இல்லை. இந்த உடன்பாட்டை தமிழக அரசு ஏற்றுக் கொள்ளவும் இல்லை.

காவிரியிலிருந்து 100 டிஎம்சி தண்ணீர் விட வேண்டும் என்று உடன்பாடு ஏற்பட்டதாக கூறுகிறார் கருணாநிதி. உண்மையில் 280 டிஎம்சி தண்ணீர் மேட்டூர் அணைக்கு வந்தால் தான் தஞ்சையில் இரண்டு முறை சாகுபடி செய்ய முடியும். இதைத்தான் நமது முதல்வர் புரட்சித்தலைவர் வலியுறுத்தி வருகிறார். கர்நாடகத்திலிருந்து தேவையான நீரையும் பெற்று விடுவார்.

### எதிர்கட்சிகளுடன் ஆலோசனை

காவிரி நீர்ப்பிரச்சினை ஏற்பட்டபோதெல்லாம் எதிர்க்கட்சிகளுடன் கலந்து பேசியதாக கருணாநிதி கூறி வருகிறார். இது தொடர்பாக அவர் ஆட்சியில் இருந்தபோது நான்கு சுற்றுப் பேச்சுவார்த்தை மட்டுமே நடத்தி இருக்கிறார். ஆனால் நமது முதல்வர் அவர்கள் 8 தடவை கூடி காவிரி நீர்ப் பிரச்சினை பற்றி விவாதித்தார். இதைத் தவிர தமிழகமும் கர்நாடகமும் மூன்று தடவைகள் கூடி இருதரப்பு பேச்சு வார்த்தைகள் நடத்தின.

எப்படியோ எதையும் உண்மைக்குப் புறம்பாக பேசி வருவதே அவரது அரசியலாகி விட்டது. கருணாநிதியை பொறுத்தவரை எந்த பிரச்சினையும் நீடிக்க வேண்டும் என்று நினைக்கிறாரே தவிர எந்தப் பிரச்சினைக்கும் தீர்வு காண வேண்டிய நிலையில் அவர் இல்லை.

கே: 1924-ஆம் ஆண்டில் ஏற்பட்ட ஒப்பந்தம் பற்றி...?

### அப்போது கவனிக்கவில்லை

ப: கருணாநிதி காலத்தில் தான் அந்த ஒப்பந்தம் காலாவதி ஆனது. இது காலாவதி ஆகாத அளவிற்கு முன் நடவடிக்கை ஏதும் அவர் காலத்தில் எடுக்கப்படவில்லை என்பது தான் உண்மை.

ஆனால் இந்த ஒப்பந்தத்தின் லட்சியத்துக்களை மறுபரிசீலனை செய்து காவிரி நீர்ப்பிரச்சினையைத் தீர்க்கும் வலுவான நடவடிக்கையில் முதல்வர் புரட்சித்தலைவர் அக்கறையோடு ஈடுபட்டு வருகிறார். எப்போதும்போல இந்தப் பிரச்சினையிலும் முதல்வர் அவர்கள் தமிழகத்திற்கு வெற்றியைத் தேடித் தருவார்.

இவ்வாறு சாத்தூர் ராமசந்திரன் கூறினார்.



## பஞ்சாபில் சீக்கிய தீவிரவாதி சுடப்பட்டு சாவு

பாட்டியாலா, செப் 10- காலிஸ்தான் போலீஸ் படையின் ஜெனரல் என்று அமைக்கப்பட்ட பாகல்சிங் பாதுகாப்பு படையினருடன் ஏற்பட்ட மோதலில் கொல்லப்பட்டார் அவரது கூட்டாளியான தாஜிந்தர்சிங் கைது செய்யப்பட்டுள்ளார்.

பாதுகாப்பு படையினருக்கும், தீவிரவாதிகளுக்கும் நேற்று இரவு சாதுரிவால் கிராமத்தில் நடைபெற்ற மோதலில் பாகல் சிங் கொல்லப் பட்டுள்ளார். பாதுகாப்பு படையினருக்கு தீவிரவாதிகளுக்கும் இடையே 45 நிமிட நேரம் கடும் துப்பாக்கிசண்டை நடந்ததாககூறப்படுகிறது.

தீவிரவாதிகளிடமிருந்து நவீன துப்பாக்கிகள் மற்றும் வெடிகுண்டுகள் கைப்பற்றப்பட்டுள்ளன.

## வருடம்2முறை தான் சொந்தஊர் போகலாம்: கவர்னர்கட்கு ஜனாதிபதி போடும் கட்டுப்பாடு

புதுடெல்லி செப் 10 "அவனுக்கென்ன கவர்னரு நெனப்பு... இஷ்டப்படி எங்கேயும் போறான்... வர்றான்" — என்று சிலர் சொல்வதைக் கேட்டிருக்கிறோம் அல்லவா?

கவர்னர்கள் அப்படி ஒன்றும் இஷ்டத்துக்கு பயணங்களை மேற்கொள்ள முடியாது போலிருக்கிறது.

அதை ஜனாதிபதி ஆர். வெங்கட்ராமன் கவர்னர்களுக்கு எழுதியுள்ள கடிதத்திலிருந்து யூகிக்க முடிகிறது.

ஜனாதிபதி பொறுப்பு ஏற்றபின் கவர்னர்களுக்கு ஆர் வெங்கட்ராமன் எழுதும் முதல்கடிதம் இது.

அதில்கவர்னர்கள்செய்ய வேண்டிய செய்யக்கூடாத காரியங்களை பட்டியல் போட்டு நினைவு படுத்தியுள்ளார் ஆர்வி.

கவர்னர்கள் சும்மா தங்கள் சொந்தஊருக்கு அடிக்கடி போய்க் கொண்டிருக்கக் கூடாது வருடத்திற்கு இரண்டு முறைதான் சொந்த ஊருக்கு- சொந்த மாவட்டத்திற்குப் போக வேண்டும்.

ஒரு தடவை போனால் பத்து நாளுக்கு மேல் அங்கே தங்கியிருக்கக் கூடாது வெளியூருக்குப் புறப்படுமுன் ஜனாதிபதிக்குத் தகவல் அறிவித்து விட்டுப்போக வேண்டும் என்று ஆர்.வி. அந்த கடிதத்தில் குறிப்பிட்டுள்ளார்.

### பாகுபாடின்றி நடக்க வேண்டும்

கட்சி பாகுபாடின்றி நடந்துகொள்ளவேண்டும். ஆணைகள் போடுகிற மாதிரி செயல்படுதல் சரியல்ல என்றும் ஜனாதிபதி அந்தகடிதத்தில் கூறியுள்ளார். முன்னாள் ஜனாதிபதி வி வி கிரி நியமித்த கமிட்டி கவர்னர்களுக்காக சில விதிமுறைகளை வகுத்துக் கொடுத்தது.

கவர்னர்கள் கடுமையான வழிமுறை ஆணைகளை பிறப்பிக்கக் கூடாது. அப்படி பிறப்பிக்க அரசியல் சட்டத்திலும் இடமில்லை என்பதை அந்த கமிட்டி கூறியிருந்தது. அதனை ஜனாதிபதி ஆர்.வி கவர்னர்களுக்கு நினைவு படுத்தியுள்ளார்.

ராஜஸ்தான் கவர்னர் வசந்தராவ் பட்டீல் அடிக்கடி தனது சொந்த மாநிலமான மராட்டியத்திற்குச் செல்வதாகவும் அங்கு அரசியலில் ஈடுபடுவதாகவும் ஏற்கெனவே பல புகார்கள் வந்துள்ளன.

## யாழ்ப்பாண பகுதிக்கு துணை ஐ.ஜியாக தமிழர் நியமனம்

கொழும்பு செப் 10- இலங்கையில் புதிதாக அமைக்கப்பட இருக்கும் தமிழ் மாநிலத்துக்கு போலீஸ்துணை ஐ ஜியாக மகேசன் செல்வரத்தினம் என்ற தமிழர் நியமிக்கப்பட்டுள்ளார் மேலும் போலீஸ் வேலைக்கு 300 தமிழர்கள் தேர்ந்தெடுக்கப்பட்டுள்ளனர்.

இந்தியா-இலங்கை ஒப்பந்தப்படி இலங்கையில் வடக்கு-கிழக்கு மாகாணங்களை இணைத்து தமிழர்களுக்கு தனி மாநிலம் அமைக்கப்படும் என்று அறிவிக்கப்பட்டுள்ளது.

தமிழ் மாநிலம் அமைப்பதற்கு முன்னதாகஇடைக்கால மந்திரி சபையில் தங்களுக்கு முதலிடம் வேண்டும் என்று தமிழீழ விடுதலைப்புலிகள் கோரி வருகிறார்கள். அதனால் இடைக்கால மந்திரி சபை அமைப்பதில்தாமதம் ஏற்பட்டுள்ளது

இதற்கிடையில் வடக்கு கிழக்கு மாகாணங்களில் சிவில் நிர்வாகத்தை மேற் கொள்வதற்கான ஏற்பாடுகள் நடைபெற்று வருகின்றன.

அதில் முதல் கட்ட நடவடிக்கையாக வடக்கு கிழக்கு மாகாணங்களை இணைத்து உருவாக்கப்படும் தமிழ் மாநிலத்துக்கு போலீஸ் துணை ஐஜியாக தமிழர் மகேசன செல்வரத்தினம் நியமிக்கப்பட்டுள்ளார்.

யாழ்ப்பாணத்தில் போலீஸ் வேலைக்கு ஏராளமான தமிழ் இளைஞர் தேர்வு செய்யப்பட்டுள்ளனர் அவர்கள் வடக்கு கிழக்கு மாகாணங்களில் சட்டம் ஒழுங்கை நிலை நாட்டும் பணியில் ஈடுபடுத்தப்படுவார்கள் ஆயுதங்களை ஒப்படைத்துவிட்ட வாலிபர்களுக்கு வேலை கொடுப்பதற்காகவே இந்த ஏற்பாடு செய்யப்பட்டுள்ளது.

## தஞ்சையில் மாற்று பயிரிட புதிய திட்டம்

சென்னை செப் 10- வறட்சி நிலைமை நிலவுவதால் இருக்கும் நீரைப் பயன்படுத்தி 15 லட்சம் ஹெக்டேரில் சம்பா பயிரிட அரசு இலக்கு நிர்ணயித்திருக்கிறது என்று விவசாயத் துறை இயக்குனர் ஆதிமூலம் நிருபர்களிடம் கூறினார். தமிழகத்தில் இரண்டுபருவ மழைகளும் பொய்த்து விட்டதால் வறட்சி நிலைமை ஏற்பட்டுள்ளது.

நீர்தேக்கங்களில் தண்ணீர் இருப்பு குறைவாக உள்ளது. இருக்கும் தண்ணீரை பயன்படுத்தி நெல் உற்பத்தியை மேற்கொள்ள வேளாண்மைத் துறைநடவடிக்கை எடுத்து வருகிறது

### சம்பா பயிர்

இந்த ஆண்டு ஆகஸ்ட் வரை 82சதவீத அளவுக்கே நெல் விளைச்சல் ஏற்பட்டுள்ளது ஆகவே சம்பா உற்பத்தியை பெருக்க இருக்கும் நீரைப் பயன்படுத்தி 15லட்சம் ஹெக்டேரில் சம்பா நெல்பயிரிட இலக்கு நிர்ணயிக்கப் பட்டுள்ளது குறுவை சாகுபடி 4லட்சத்தி 1[illegible] ஆயிரம் ஹெக்டேரில் நடந்திருக்க வேண்டும் ஆனால் 85 ஆயிரம் ஹெக்டேரில் தான் பயிரிடப்பட்டுள்ளது.

தஞ்சை மாவட்டத்தில் 2 லட்சம் ஹெக்டேரில் மானாவரி பயிர் பயிரிட திட்டம் தீட்டப்பட்டுள்ளது மாற்றுப்பயிர் திட்டமும் செயல்படுத்தப்படும் நெல் சாகுபடி நிலங்களில் நீர் பற்றாக்குறை காரணமாக நெல் சாகுபடி செய்யமுடியாத பகுதிகளில் பயறு வகைகள் சாகுபடி செய்ய ஊக்குவிக்கப்படும்

பருத்தி போன்ற பயிர்களும் பயிர் செய்ய வகை செய்யப்படும் நெல்பயிரிடவும் மாற்றுப் பயிர் செய்யவும் ஊக்கமும் அரசு அளிக்கும் இவ்வாறு ஆதிமூலம் கூறினார்.

## ஈரான்-ஈராக் போர்: அமெரிக்கா-ரஷ்யா கூட்டு முயற்சி

புதுடெல்லி செப் 10- பல ஆண்டுகளாக நடந்து கொண்டிருக்கும் ஈரான், ஈராக் போரை முடிவுக்கு கொண்டுவரும் முயற்சியில் அமெரிக்காவும் ரஷ்யாவும் கூட்டாக முயற்சிகளை மேற்கொண்டுள்ளன. இது தொடர்பாக அமெரிக்க ரஷ்ய உயரதிகாரிகள் ஜெனிவாவில் சந்தித்து பேசி வருகின்றனர்

## மே-வங்க ஆட்சியில்ரூ 50 கோடி ஊழல்: காங்கிரஸ் புகார்

புதுடெல்லி செப் 10- மேற்குவங்க மார்க்சிஸ்ட் அரசு இடக் குத்தகைவிட்டதில் சுமார் 50 கோடி ரூபாய் வரை ஊழல் புரிந்துள்ளதாக மேற்குவங்க காங்கிரஸ் புகார் கூறியுள்ளது

இது குறித்து மேற்கு காங்கிரஸ் தலைவர் பிரியரஞ்சன் தாஸ்முன்ஷி நிருபர்களிடம் கூறியதாவது:

கல்கத்தாவைச் சுற்றியுள்ள அரசு பண்ணைகள் மற்றும் இடங்களை குத்தகைக்கு விடுவதில் ஊழல் நடந்துள்ளது. கள்ளக்கடத்தல் காரர்கள் மற்றும் [illegible] குத்தகை வைப்போருக்கு முறைகேடாக இடங்கள் விடப்பட்டுள்ளன.

இந்த முறைகேட்டின் மூலம் சுமார் 50 கோடி ரூபாய் வரை லஞ்சமாக அளிக்கப்பட்டுள்ளதாக கூறப்படுகிறது

இவ்வாறு தாஸ்முன்ஷி கூறினார்.

## தலைமைக் கழக அறிவிப்பு

இதயதெய்வம்

# புரட்சித்தலைவர்

## பிறந்த நாள் விழா

மற்றும்

புரட்சித்தலைவர் தமிழகத்தின் முதல்வராக ஆட்சிப் பொறுப்பினை ஏற்று 10 ஆண்டுகள் நிறைவு பெற்று முதல்வர் புரட்சித்தலைவர்தலைமையில் அமைந்த கழக அரசு பதினொன்றாம் ஆண்டில் வெற்றிகரமாக ஆட்சிநடத்தி வருவதை ஒட்டி பொற்கால ஆட்சி படைத்த புரட்சித்தலைவர் அரசு இதுவரை ஆற்றிய அரும் பெரும் பணிகள் பற்றிய

## சாதனை விளக்க பொதுக்கூட்டங்கள்

### 12-9-1987 சனிக்கிழமை

வடலூர்

குறிஞ்சிப்பாடி ஒன்றியம்

தென் ஆர்காடு மாவட்டம்

சிறப்புரை

மாண்புமிகு அமைச்சர் திரு ஆர். சவுந்தரராசன் பி காம அவர்கள்

திரு இரா கரிகாலன் அவர்கள்

தென் ஆர்காடு மாவட்ட கழக இணைச்செயலாளர்

திரு தே ஜனார்த்தனன பிஎஸ்ஸி அவர்கள்

தென் ஆர்காடு மாவட்ட எம் ஜி ஆர் மன்றச் செயலாளர்

கூட்ட ஏற்பாடு

திரு கே இளங்கோவன் அவர்கள்

புரட்சித்தலைவர் எம் ஜி ஆர் மன்றம்

திரு கே பாலுசாமி அவர்கள்

புரட்சித்தலைவர் எம் ஜி ஆர் மன்றம்

திரு எஸ் இராமலிங்கம் அவர்கள்

எம் ஜி ஆர் இளைஞர் அணி

திரு ஆர கோதண்டபாணி அவர்கள்

எம் ஜி ஆர் இளைஞர் அணி

திரு எஸ் ஆறுமுகம் அவர்கள்

அண்ணா தொழிற் சங்கம்

மற்றும்

குறிஞ்சிப்பாடி ஒன்றிய அனைத்திந்திய அண்ணா தி மு கழகம்

### 19-9-1987 சனிக்கிழமை

சென்னை

பூங்கா நகர் தொகுதி

58வது வட்டம்

சிறப்புரை

மாண்புமிகு அமைச்சர் திரு கே கே எஸ் எஸ் ஆர் இராமச்சந்திரன் அவர்கள்

திரு இ மதுசூதனன் அவர்கள்

சென்னை மாவட்ட எம் ஜி ஆர் மன்றச்செயலாளர்

திரு வி எஸ் பஞ்சவாணம் எம் எல் ஏ அவர்கள்

கலை நிகழ்ச்சி

திரு. பல்லவன் சினிவாசன கலைக்குழுவினர்

கூட்ட ஏற்பாடு

திரு மாசிலாமணி அவர்கள்

(புரட்சித்தலைவர் எம் ஜி ஆர். மன்றம்)

மற்றும்

58 வது வட்ட அனைத்திந்திய அண்ணா தி மு கழகம்

### 20-9-1987 ஞாயிற்றுக்கிழமை

ரகுநாதபுரம் புதுவிடுதி

கறம்பக்குடி ஒன்றியம்

புதுக்கோட்டை மாவட்டம்

சிறப்புரை

கோவை செல்வி மணிமேகலை அவர்கள்

திரு எஸ் ரகுபதி பி எஸ் சி பி எல் அவர்கள்

(புதுக்கோட்டை மாவட்ட கழகச்செயலாளர்)

திரு ஏ வெங்கடாசலம் எம் எல் ஏ அவர்கள்

திரு என் குணசேகரன் அவர்கள்

புதுக்கோட்டை மாவட்ட எம் ஜி ஆர் இளைஞர் அணிச்செயலாளர்

கூட்ட ஏற்பாடு

திரு எஸ் எம் சிதம்பரம் அவர்கள்

கறம்பக்குடி ஒன்றிய கழகச்செயலாளர்

திரு உ சுலை மான் அவர்

கறம்பக்குடி ஒன்றிய எம் ஜி ஆர் இளைஞர் அணிச்செயலாளர்

ஜெயலலிதா எம் பி

சென்னை 14 — கொள்கை பரப்புச் செயலாளர்

10-9-1987 — அனைத்திந்திய அண்ணா தி மு க

## அமைச்சர் நிகழ்ச்சிகள்

அருணாசலம்

செப்டம்பர் தேதி திருச்செந்தூர் 12 கோவில்பட்டி 13 திருச்சி 14 நாரண மங்கலம் இலுப்பகுடி 15 கடலூர் 16 திருச்சி, 17 வரகூர் ஆலத்தூர்

## நமது இல்லத் திருமணம்

பசும்பொன் முத்துராமலிங்கம் மாவட்டம், கிருங்காககோட்டை பாசேந்திரனுக்கும் அடைக்கலம மைக்கும் திருமணம் கிருங்காககோட்டையில் 12-ம தேதி நாளை காலை 9 மணி அளவில நடைபெறுகிறது.

வறட்சி பகுதிகளை பார்வையிட தமிழ்நாட்டிற்கு வருகை தந்த போது, மதுரையில் உள்ள காமராசர் நினைவு இல்லத்திற்கு பிரதமர் ராஜீவ்காந்தி தனது துணைவியார் சோனியாவுடன் சென்று மரியாதை செலுத்தினார் நிதியமைச்சர் டாக்டர் நாவலர் அமைச்சர் வி வி சுவாமிநாதன் ஆகியோர் உடனிருந்தனர்

# பண்டித கோவிந்த வல்லபபந்த்: நூறாவது பிறந்த நாள் விழா

மலைகளின் மைந்தன் என்று நேருவால அழைக்கப்பட்ட மாபெரும் தியாகி பண்டித கோவிந்தவல்லப பந்த்

இவர் அல்மோரா மாவட்டத்தில் குந்த என்ற சிற்றூரில் பிறந்தார்.

அலகாபாத் பல்கலைக் கழகத்தில் சட்டக்கல்வி பயின்றார்.

வல்லமைவாய்ந்த பேச்சாற்றலும் வாதத்திறனும் கொண்டவர்.

இவர் நாட்டின்விடுதலை போராட்டத்தில் பல கட்டத்தில் பங்கு பெற்றவர்

மலைப்பகுதியில் "கூலி பேகர்" என்ற கொடுமையான பழக்கம் இருந்து வந்தது சம்பளம் வாங்காமல் அதிகாரிகளிடம பணி புரிய வேண்டிய நிலை இருந்தது இதை கடுமையாக எதிர்த்து பந்த் போராட்டம் நடத்தினார்

1923ல் உத்திரப்பிரதேச சட்டமேலவைஉறுப்பினர் ஆனார்

பின்னர் உ பி காங்கிரசின் துணைத் தலைவராகவும் 1927ல் அதன் தலைவராகவும் பந்த்பணியாற்றினார்

பந்த் காந்தியுகத்தின் படைப்பு கோகலே மாளவியா லஜபதிராய் திலக் ஆகியோர் பந்த் அவர்களின் ஆளுமைப் பண்புகளை ஓரளவுவளர்த்தவர்கள்

ஆனாலும் மகாத்மா காந்தி தான் பந்தை முற்றிலும் உருமாற்றியவர்

அகமதாபாத் காங்கிரஸ் மாநாட்டிலிருந்து திரும்பிய பந்த் தனது வக்கீல் தொழிலை விட்டு முழுநேர அரசியல் வாதி ஆனார்.

உப்புச் சத்தியாக்கிரகத்தில் ஈடுபட்ட பந்த் பிறகு மிகவும் நோய் வாய்ப்பட்டார். பல தியாகங்களை புரிந்த பந்த் 1937-ல் உ.பி முதல்வரானார்.

இந்தியசுதந்திர சட்டம் நிறைவேற முன்னோடியாக இருந்தவர் பந்த

உ பி மாநில முதலமைச்சர் பொறுப்பில் 8 ஆண்டுக் காலம் இருந்து உ பியின் வரலாற்றைப் படைக்கிற பொறுப்பில் பந்த் சிறந்து விளங்கினார்.

1954ல் மத்திய அமைச்சரானார் பின் உள்துறை அமைச்சராகப் பொறுப் பேற்றார்

1957ல் இவருக்கு பாரத ரத்னா விருது வழங்கப்பட்டது

தனது உடல் நிலை நலிவுற்றிருந்தும் அயராது பாடுபட்டார்

1961ம் ஆண்டு பிப்ரவரி மாதம் 20ம் தேதி அலுவலில் இருந்த போதே உணர்வு இழந்தார் 1961 மார்ச் 7ம் தேதி இயற்கைஎய்தி மங்காப் புகழ் பெற்றார்

அவரது நூற்றாண்டு விழாவில் அவரது எண்ணங்கள் ஈடேற நாமும் உறுதுணையாக இருப்போம்.

## ராஜீவ் புகழாரம்

சுதந்திர போராட்ட தலைவர்களில் ஒருவரான கோவிந்த் வல்லப பந்த்'தின் நூற்றாண்டுவிழா இன்று நாடு முழுவதும் கொண்டாடப்படுகிறது

வல்லப பந்த்'தின் நூற்றாண்டு விழாவைபிரதமர் ராஜீவ் துவக்கி வைத்து பந்த சுதந்திரத்திற்காக ஆற்றிய அரும்பணிகளை நினைவு கூர்ந்தார் பந்த் உருவச்சிலைக்கும் ராஜீவ் மாலை அணிவித்தார்

நிகழ்ச்சியில் துணை ஜனாதிபதி சங்கர்தயாள் சர்மா மத்திய அமைச்சர்கள் பலரும் பங்கேற்றனர்

## ஆலோசனைக் கூட்டம்

செங்கல்பட்டு செப் 10-

பேரறிஞர் அண்ணா பிறந்த நாள் கூட்டத்தில் பங்கேற்ககாஞ்சிபுரம்வரும் கழக கொள்கை பரப்புச் செயலாளர் செல்வி ஜெயலலிதாவிற்கு சிறப்பான வரவேற்பு கொடுப்பது பற்றி ஆலோசிக்க காஞ்சி மாவட்ட மாணவர் அணி ஆலோசனைக் கூட்டம் வரும்13ந் தேதி காலை 11 மணிக்கு நடைபெறுகிறது

க சேகர் தலைமையிலும் பவராமன் நடராசன் முன்னிலையிலும் நடைபெறும் இந்த ஆலோசனைக்கூட்டத்தில் மாணவர் அணி நிர்வாகிகள் அனைவரும்பங்கேற்குமாறு சேகர் கேட்டுக் கொண்டுள்ளார்

# பல்லவனில் நெரிசலை சமாளிக்க புதிய திட்டங்கள்

சென்னை செப் 10-

சென்னை நகரில் பஸ் ஸ்டாப்புகளில் பயணிகளுக்கு டிக்கட்டுகள் வழங்கும் முறை மீண்டும் கொண்டு வரப்படவுள்ளது என்று பல்லவன் போக்குவரத்துக் கழக தலைவர் பாஸ்கரா தெரிவித்தார்

சென்னை நிருபர்கள் சங்கத்தின் வரவேற்பின் போது மேற்கண்ட தகவலை பாஸ்கரா தெரிவித்தார்

சென்னை நகரின் நெரிசல் மிகுந்த 37 இடங்களில் பஸ் ஸ்டாப்புகளில் டிக்கட் வழங்க கண்டக்டர்கள் நியமிக்கப்பட இருக்கிறார்கள் ஸ்டாண்ட் கண்டக்டர்கள் முறை ஏற்கனவே பழக்கத்தில் இருந்த ஒன்று தான் ஆனால் அந்தமுறை நிறுத்தப்பட்டு விட்டது

கற்போது தொழிலாளர்களுடன் பேச்சுவார்த்தை நடத்திய பின் மீண்டும் இந்த முறை கொண்டு வரப்பட இருக்கிறது.

அக்டோபர் முதல் தேதி முதல் பஸ் ஸ்டாப்புகளில் கண்டக்டர்கள் நிறுத்த கட்டுகளை வழங்குவார்கள்.

மேலும் பயணிகள் நலன் கருதி பஸ் புறப்படும் (டெர்மினஸ்) இடங்களில் எந்த பஸ் முதலில் புறப்படும் என்பதை அறிவிக்கும் வகையில் பஸ்ஸின் முன் பக்க தலைப்பகுதியில் வண்ண விளக்கு பொருத்தப்படும் புறப்பட தயாராக இருக்கும் பஸ்ஸில் இந்த விளக்கு எரிந்து கொண்டிருக்கும்.

வி சர்வீஸ் பஸ்களுக்கு மஞ்சள் நிற விளக்கும் ஜே' சர்வீஸ் பஸ்களுக்கு நீலநிற விளக்கும் மற்ற பஸ்களுக்கு பச்சைநிற விளக்குகளும் பொருத்தப்படும்.

இந்த விளக்குகள் இரவு நேரத்தில் பஸ் சென்று கொண்டிருக்கும போது எரியும் இதனால் தொலைவில் பஸ் வரும்போதே எரியும் விளக்குகளை கொண்டு வி சர்வீஸ் ஜே சர்வீஸ் என்று தெரிந்து கொள்ளலாம்.

மேலும் ஒவ்வொருவழித்தடங்களிலும் கடைசியாகப் புறப்படும் பஸ் ஸின் நிறுத்தம் சிவப்பு வண்ண விளக்குகள் மூலம் தெரிவிக்கப்படும்.

பொதுமக்கள் நலன் கருதி பஸ்களில் தொல்லை தரும் ஆரன்கள் அகற்றப் பட்டுவிட்டது.

கண்டக்டர் டிரைவர்கள் பயணிகளிடம் நடந்து கொள்ளும் பயிற்சி வகுப்புகள் நடத்தப்பட்டு வருகிறது

மற்ற போக்குவரத்துக் கழகங்கள் போல் தொலை தூரத்திற்கு இரவுநேர பஸ்கள் விடும் எண்ணம் இல்லை பல்லவன் போக்குவரத்துக் கழக பஸ்கள் 42 கிலோ மீட்டர் தொலைவு வரைதான் செல்ல பர்மிட் உண்டு

நிர்வாகத்தோடு பொதுமக்களும் ஒத்துழைப்பு தந்து உதவிட வேண்டும் என்றும் பாஸ்கரா கேட்டுக் கொண்டார்

சென்னை நிருபர்கள் சங்கத்தலைவர் ஜெகநாதன் பாஸ்கராவை வரவேற்றார். துணைத் தலைவர் அருண் நன்றி கூறினார்.

# இந்திரா கொலை முயற்சி வழக்கு: தி.மு.க.வினர் விடுதலையை எதிர்த்து அரசு அப்பீல்

சென்னை செப் 10-

மறைந்த முன்னாள் பிரதமர் இந்திராகாந்தி கொலைமுயற்சிவழக்கில் கருணாநிதி அன்பழகன் சாதிக்பாட்சா உள்பட 63 பேரை விடுதலை செய்ததை எதிர்த்து தமிழக அரசு சென்னை உயர்நீதி மன்றத்தில் அப்பீல் செய்துள்ளது.

1977ம் ஆண்டு அக்டோபர் மாதம் மறைந்த பிரதமர்இந்திராகாந்திமதுரை காஞ்சிபுரம் சென்னை ஆகிய இடங்களில் சுற்றுப் பயணம் செய்தார்,

அப்போது இந்திரா காந்திக்கு எதிர்ப்பு தெரிவித்து திமுக வினர் கறுப்புக் கொடி காட்டி ஆர்ப்பாட்டம் நடத்தினார்கள்.

இந்திராகாந்தி கார்மீது கல் வீசப்பட்டது காரில் இருந்த சித்தன் நெடுமாறன் ஆகியோர் காயம் அடைந்தனர்

இதைத் தொடர்ந்து கருணாநிதி உள்பட 8?பேர் மீது மதுரை நிலகுற்றப் பிரிவு புலனாய்வுத்துறையினர் சென்னையில் உள்ள தனி செசன்சு கோர்ட்டில் வழக்குத் தொடர்ந்தனர்

மதுரையில்தான் கொலை முயற்சி நடந்ததாகக் கூறி வை கோபால்சாமி எம் பி சட்ட மன்ற உறுப்பினர்கள் ரகுமான்கான்பொன்முத்துராமலிங்கம் உள்பட 15பேருக்கு தலா 2 ஆண்டு கடுங் காவல் தண்டனை விதிக்கப்பட்டது

இவ்வழக்கில்கருணாநிதி உள்பட 65 பேர் விடுதலை செய்யப்பட்டனர்

இப்போது கருணாநிதி அன்பழகன் உள்பட 63 பேரை விடுதலை செய்ததை எதிர்த்து தமிழக அரசு சென்னை உயர்நீதி மன்றத்தில் அப்பீல் செய்துள்ளது இதை அரசு வக்கீல் எஸ் தினகரன் தாக்கல் செய்துள்ளார்

அதில் கூறப்பட்டுள்ளதாவது

சென்னையில் தான் கொலை முயற்சிக்கு சதித் திட்டம் தீட்டப்பட்டது.

ஆனால் தீர்ப்பில் சென்னையில் சதித் திட்டம் நடத்தப்படவில்லை என்று கூறி இவர்களை விடுதலை செய்தது தவறாகும் அவர்கள் கூட்டு விரோதமாக கூடியது குற்றமாகும்

ஆனால் அவர்கள் குற்றவாளிகள் இல்லை என்று கூறி செசன்சு கோர்ட்டு விடுதலை செய்தது அப்போது இருந்த தடை உத்தரவு அமலுக்கு இது எதிரானதாகும் எனவே 63 பேர்களுக்கும் தகுந்த தண்டனை வழங்க வேண்டும

மேலும் 55 பேர்களுக்கும் பல குற்றச்சாட்டுகள் நிரூபிக்கப்பட்டும் தண்டனை வழங்கப்படவில்லை. சில குற்றச்சாட்டுகளுக்கு மட்டுமே 2 ஆண்டு கடுங்காவல் தண்டனை விதிக்கப்பட்டது அவர்களுக்கும் விடுதலையான குற்றச்சாட்டுகளுக்கும் தண்டனை விதிக்க வேண்டும்.

இவ்வாறு தமிழக அரசின் அப்பீல் மனுவில் குறிப்பிடப்பட்டுள்ளது

அப்பீல் மனு நீதிபதி பத்மினி ஜேசுதுரை முன் இன்று வந்தது இந்தவழக்கு செசன்சு கோர்ட்டில் நடந்தபோது தாம் அரசு வழக்கறிஞராக ஆஜரானதால் அதை தாமே விசாரிப்பது பொருத்தமற்றது என்று கூறி வேறு நீதிமன்றத்திற்கு மாற்ற பத்மினி ஜேசுதுரை பரிந்துரைத்தார் அதன்படி வேறு நீதிமன்றத்தின் வேறு நீதிபதி முன் அது விசாரணைக்கு வர இருக்கிறது.

# பாரி வள்ளல்

வாராந்திர பரிசுச் சீட்டு குலுக்கல் முடிவுகள்

68-வது 'பாரிவள்ளல்' வாராந்திர குலுக்கல் முடிவுகள்: நாள்: 9-9-1987
இடம்: பரிசுச்சீட்டு குலுக்கல் மண்டபம், சென்னை-600002

முதல் பரிசு: ரூ. 1,00,000
(அனைத்து வரிசைக்கும் பொது)
ஜி யு 250428

ஆறுதல் பரிசு: ரூ. 1,000-
(முதல் பரிசு பெற்ற வரிசையைத் தவிர மற்ற இரு வரிசைகளுக்கும்)
ஜி டி 250428 ஜி வி 250428

இரண்டாம் பரிசு. ரூ. 5,000
(3 பரிசுகள்) வரிசைக்கு ஒன்று வீதம்
ஜி டி 126205 ஜி யு 231852 ஜி வி 397117
அனைத்து வரிசைக்கும் பொது

மூன்றாவது பரிசு: ரூ. 1,000- (45 பரிசுகள்)
கீழ்க்கண்ட ஆறு எண்களில் முடியும் அனைத்து பரிசுச்சீட்டுகளுக்கும்

| | | | | |
|---|---|---|---|---|
| 127010 | 1 1380 | 212890 | 261763 | 319632 |
| 132386 | 186589 | 241883 | 308684 | 363366 |
| 16 053 | 20 805 | 256204 | 31438 | 363740 |

நான்காவது பரிசு: ரூ. 500- (90 பரிசுகள்)
கீழ்க்கண்ட கடைசி ஐந்து எண்களில் முடியும் அனைத்து பரிசுச்சீட்டுகளுக்கும்

| | | | | |
|---|---|---|---|---|
| 07 869 | 24437 | 47865 | 65259 | 899 0 |
| 16784 | 35359 | 53415 | 7919 | 99797 |

ஐந்தாவது பரிசு ரூ. 50- (900 பரிசுகள்)
கீழ்க்கண்ட கடைசி நான்கு எண்களில் முடியும் அனைத்து பரிசுச்சீட்டுகளுக்கும்

| | | | | |
|---|---|---|---|---|
| 0688 | 2775 | 46[illegible]2 | 6394 | 8543 |
| 1996 | 3595 | 5394 | 1027 | 9897 |

ஆறாவது பரிசு ரூ. 20- (900 பரிசுகள்)
கீழ்க்கண்ட கடைசி நான்கு எண்களில் முடியும் அனைத்து பரிசுச்சீட்டுகளுக்கும்

| | | | | |
|---|---|---|---|---|
| 0708 | 2309 | 4496 | 6619 | 8761 |
| 1023 | 3616 | 5318 | 7495 | 95[illegible]6 |

ஏழாவது பரிசு: ரூ. 10- (9000 பரிசுகள்)
கீழ்க்கண்ட கடைசி மூன்று எண்களில் முடியும் அனைத்து பரிசுச்சீட்டுகளுக்கும்
002 279 461 612 824 187 380 529 744 992

எட்டாவது பரிசு: ரூ. 5- (9000 பரிசுகள்)
கீழ்க்கண்ட கடைசி மூன்று எண்களில் முடியும் அனைத்து பரிசுச்சீட்டுகளுக்கும்
020 225 419 698 899 191 309 565 705 984

மேற்கண்ட எண்களில் முடியும் பரிசுச்சீட்டுகளின் அடிக்கட்டைகளுக்கு விற்பனையாளர் பரிசாக ரூ.5- வழங்கப்படும்.

பரிசுத்தொகை பெற விண்ணப்பிக்க வேண்டிய கடைசி நாள்: 7-11-1987

அடுத்த பாரிவள்ளல் குலுக்கல் 16-9-87 அன்று சென்னையில் நடைபெறும்

பாரிவள்ளல், காவிரி மினி பம்பர் மற்றும் சூப்பர் பம்பர் குலுக்கல்களுக்கான பரிசுச்சீட்டுகள் விற்பனையிலுள்ளன.

இயக்குநர்
தமிழ்நாடு பரிசுச்சீட்டு சென்னை-600 001

டி பி ஆர் 2199-செ-87-எலிகண்ட

# அண்ணா பெயரைச்சொல்லி கொள்ளை அடிக்கும் கருணாநிதி: அருணாசலம் தாக்கு

சென்னை, செப். 10- வறட்சி நேரத்திலும் அறிவாலயநிதி என்ற பெயரில் கோடி கோடியாக கொள்ளையடிக்கிறார் கருணாநிதி ஆனால் நீதியை நிலைநாட்டி தொண்டர்களின் மனதில் அண்ணாவின் கொள்கை ஆலயங்களை நிறுவிக் கொண்டிருப்பவர் புரட்சித்தலைவர் என்று அமைச்சர் அருணாசலம் கூறினார்.

புரட்சித் தலைவரின் பிறந்தநாள் விழாவும் கழக அரசின் சாதனை விளக்கப் பொதுக்கூட்டமும் அண்ணா நகர் தொகுதி எம் ஜி ஆர் இளைஞர் அணியின் சார்பாக சூளைமேட்டில் நடைபெற்றது

இந்தக் கூட்டத்தில் கலந்துகொண்டு ஆதி திராவிடர் நலத்துறை அமைச்சர் அருணாசலம் சிறப்புரையாற்றினார். அப்போது அவர் கூறியதாவது:-

புரட்சித்தலைவர் நல்ல பல திட்டங்களைத் தீட்டி நாட்டு மக்களின் நலனில் அக்கறை கொண்டு செயல்பட்டு கொண்டிருக்கிறார் இதைக்கண்டு மனம் பொறுக்காமல் கருணாநிதி கட்சிக்காரர்கள் உளறிக் கொண்டிருக்கிறார்கள் 'பைத்தியக்காரன் பத்தும் சொல்வான் போகட்டும் விட்டுவிடு என்று ஒதுக்கி விட்டு நம் பணியைச் செவ்வனே நிறைவேற்றுவோம்.

## ஒப்பற்ற தலைவர்

புரட்சித்தலைவர் மக்கள் தேவையை உணர்ந்து செயல்படுகிறார் ஆனால் கருணாநிதி நிதியைத் திரட்டுவதிலே குறியாக இருக்கிறார்.

நீதியை நிலை நாட்டுகிற ஒப்பற்றத் தலைவராக இலங்கையை மீட்ட சுந்தர ராமனாக புரட்சித்தலைவர் செயல்படுகிறார் அவரது படங்களும் பாடல்களும் அண்ணாவை அண்ணாவின் கருத்துக்களைத் தொட்டுக்காட்டிக்காட்டுவனவாகவே அமைந்துள்ளன அவரது பாடல்கள் பொருள் நிறைந்தவை புரட்சித் தலைவர் அரசு அண்ணாவின் வழியில் அவரது கொள்கைகளை செயல்படுத்தி நல்லாட்சி புரிந்து வருகிறது.

கருணாநிதி அண்ணா அறிவாலயம் என்ற பெயரில் நிதி வசூல் செய்கிறார் இந்த வறட்சி நேரத்திலும் கோடி கோடியாக வசூலித்துக் கொண்டு திரிகிறார் ஆனால் புரட்சித் தலைவர் அண்ணாவின் கருத்துக்களை தொண்டர்களின் மனதில் பதிய வைத்து அழியாத அறிவாலயங்களை உருவாக்கிக் கொண்டிருக்கிறார்.

'இதயம் தெய்வம் நமது அண்ணா தோன்றினார் அவர் என்றும் வாழும் கொள்கை தீபம் ஏற்றினார்' என்று தனது படத்தில் பாடியதோடு மட்டுமல்லாமல் அண்ணா பெயரில் அறக்கட்டளையை நிறுவியும் கழகக் கொடியில் அண்ணாவின் திருஉருவப் படத்தை படபடவென்று வீசி பறக்கவும் செய்தவர் புரட்சித்தலைவர்

இலங்கை பிரச்சினையில் தமிழன் என்று கத்தினார் கருணாநிதி ஆனால் இலங்கைத் தமிழர்களின் துயர் துடைக்க அவர் என்ன முயற்சியை மேற்கொண்டார் ஒன்றுமில்லை அதன் மூலம அரசியல் ஆதாயம் தேட முயன்றார் கருணாநிதி

அல்லல்பட்ட இலங்கை தமிழருக்கு அரசு மூலமாக எட்டரை கோடி ரூபாயும் கழக நிதியிலிருந்து 10 லட்ச ரூபாயும் கொடுத்ததோடு நில்லாமல் தனது சீரிய முயற்சியால் இலங்கை-இந்திய ஒப்பந்தத்தை நிறைவேற்றினார் இலங்கையில் வாழும் தமிழர்களுக்கு தனி மாநிலம் ஏற்படுத்தி அவர்களை நிரந்தரமான அமைதி நிலையில் வாழ வைத்தவர் புரட்சித்தலைவர்

இந்த நல்ல இதயத்தை புரிந்து கொண்டு பாராளுமன்றக் கூட்டத்தில் பிரதமர் ராஜீவ்காந்தி புரட்சித் தலைவரை ராஜதந்திரி என்றும் சிறந்த நாட்டுப் பற்று மிக்கவர் என்றும் பாராட்டினார்.

இதெல்லாம் பொறுக்காமல் கருணாநிதி சரித்துக் கொட்டுகிறார். இந்த வறட்சி நேரத்திலும் அறிவாலய நிதியாக 2 கோடி ரூபாய் வசூல் செய்து விட்டேன் என்று மார்தட்டுகிறார். அத்தோடு நிற்காமல் போராட்டம் என்று அறிவிக்கிறார் அவரின் போராட்டங்கள் எல்லாம் வாகின்றன புஸ்வாணம் ஆகி பொசுங்கிப் போகின்றன மக்கள் சக்தி புரட்சித் தலைவர் பக்கமே இருக்கிறது என்பதை மக்கள் நிரூபித்துக் கொண்டிருக்கிறார்கள்.

சில இடங்களில் திமுக கொடி அரைக்கம்பத்தில் பறக்கின்றன நான் திமுக நண்பர்களை விசாரித்தேன். கொடியேற்ற வந்த முக ஸ்டாலின் 500 ரூபாய் கேட்டார் எங்களிடம் இருந்ததோ 250 ரூபாய் என்று கொடுத்தோம் அவர் கொடியை அரைக் கம்பத்திலே விட்டுசென்று விட்டார் என்று அவர்கள் கூறினார்கள்.

## தி.மு.க வின் வசூல் வேட்டை

நமது முதல்வர் புரட்சித் தலைவர் ஒரு குழந்தைக்கு பெயர் வைத்தால் கூட தனது சிவந்த கரத்தால் அள்ளிக் கொடுக்கிறார். கொடுத்து கொடுத்து சிவந்தகரம் புரட்சித் தலைவருக்கு ஆனால் வாங்கி வாங்கி பழக்கப்பட்டவர் கருணாநிதி எங்கும் வசூல் வேட்டை நடத்துவதே அவருக்குக் குறியாக இருக்கிறது புரட்சித் தலைவர் தான் கொடுப்பதோடு மட்டுமல்லாமல் தன்னைச்சேர்ந்தவர்களையும் கொடுக்கும் பழக்கம் உள்ளவர்களாக மாற்றி அமைத்தவராவார்

நீதிக்குத் தண்டனை என்று ஓர் படத்தையெடுத்து தனது ஆட்சி காலத்தில் நடத்திய அக்கிரமங்களை எடுத்துக் காட்டினார் கருணாநிதி அனுபவப்பூர்வமாக தான் திருடி மற்றவர்களையும் நம்பமாட்டான என்பது போல அவர் மற்றவர்களையும் அப்படியே நினைத்துக் கொண்டிருக்கிறார் ஆனால் அண்ணா திராவிட முன்னேற்றக் கழகத்தினர் உழைப்பாளிகளாக இருக்கிறார்கள் தன் உழைப்பிலிருந்து மற்றவர்களுக்கு கொடுக்கிறார்களே தவிர நிதி வசூல் செய்து கொண்டு ஏமாற்றித்திரிவதில்லை.

அண்ணா பிறந்த நாளை குழந்தைகளை கொடிய நோயான போலியோவிலிருந்து பாதுகாக்க "குழந்தைகள் நல வாரமாக" ஒருவார காலத்தை அனுஷ்டிக்க முதல்வர் புரட்சித்தலைவர் உத்தரவு பிறப்பித்துள்ளார்

புரட்சித்தலைவர் தனது ஆட்சியில் எண்ணிலடங்கா புரட்சிகள் நடத்தி ஏழை எளிய மக்களின் வாழ்வை ஏற்படுத்தி மேம்பாட்டைச் செய்து பொற்கால ஆட்சி படைத்து வருகிறார்,

இந்தவிழாவில் சென்னை மாவட்ட எம் ஜி. ஆர் மன்றச் செயலாளர் இ. மதுசூதனன் திருவை அண்ணாமலை வ. சுகுமார்பாபு எம். சி சேகர், கோதண்டராமன், தி. நகர் மூர்த்தி வெங்கடேசன் கே எஸ். குமார், இரா பாண்டியன செல்வராஜ் ராதாகிருஷ்ணன் சுமாறன் ரவி சிவா மற்றும் பலர் பேசினார் விழாவுக்கு சான்றாப் தலைமைவகித்தார். வி. வேமூர்த்தி முன்னிலை வகித்தார், ஆர் மணிவரவேற்றார் கே சண்முகம் நன்றி கூறினார்

## தமிழ்நாடு வனத்துறை

அறிஞர் அண்ணா உயிரியல் பூங்கா
சென்னை-48

## குறுகிய ஒப்பந்த புள்ளி அறிவிப்பு

தமிழ் நாடு அரசு ஆளுநருக்காக அறிஞர் அண்ணா உயிரியல் பூங்கா வனப்பாது காவலர் அவர்களால் இவ்வாண்டு அறிஞர் அண்ணா உயிரியல் பூங்காவில் பதிவ செய்த ஒப்பந்தக்காரர்களிலிருந்து கீழ் குறிப்பிட்ட அட்டவணையில் உள்ளபடி மிருகங்கள் பறவைகள் மற்றும் ஊர்வன ஆகிய விலங்குகளுக்கான உணவுப் பொருள் வழங்குவதற்கான ஒப்பந்தப் புள்ளிகள் அறிஞர் அண்ணா உயிரியல் பூங்கா அலுவலகத்தில் பெற்றுக் கொள்ளப்படும் இதனைக் குறித்த விவரங்களும் ஒப்பந்தப்புள்ளி படிவங்களும் அறிஞர் அண்ணா உயிரியல் பூங்கா அலுவலகத்தில் 1 9 87 முதல் 17 9 87 வரை பெறலாம் அறிஞர் அண்ணா உயிரியல் பூங்கா அலுவலகத்தில் ஒப்பந்தப் புள்ளிகள் பிற்பகல் 3.00 மணி வரை 18-9-87 அன்றே பெறுவதற்கான கடைசி தேதி 18 9 87 அன்று பிற்பகல் 3 30 மணி அளவில் அறிஞர் அண்ணா உயிரியல் பூங்கா அலுவலகத்தில் மேற்படி ஒப்பந்தப் புள்ளிகள் அறிஞர் உயிரியல் பூங்கா வனப்பாது காவலராலோ அல்லது அவரால் அவருடைய அதிகாரம் பெற்ற வேறு அலுவலராலோ திறக்கப்படும்.

| வ. எண் | உணவு பொருள் விவரம் | ஒப்பந்தக்கால அளவு | முன்வைப்புத் தொகை | ஒப்பந்தப் புள்ளி படிவத்தின் விலை |
|---|---|---|---|---|
| | | | ரூபாய் | ரூபாய் |
| 1. | மாட்டிறைச்சி மற்றும் கல் லீரல் | 1-10 87 முதல் 31 3-88 வரை | 1850-00 | 10-55 |
| 2. | மீன் | ,, | 1450-00 | 10-55 |
| 3 | கோதுமை தவிடு | ,, | 850-00 | 10-55 |
| 4. | அழுகா பொருட்கள் | ,, | 1000-00 | 10-55 |
| 5 | அழுகும் பொருட்கள் | ,, | 1100-00 | 10-55 |
| 6 | எலி | ,, | 100-00 | 10-55 |

உண்மைநகல் உத்தரவுப்படி

(ஒம்) பி அருள்பிரகாசம்
வனப்பாதுகாவலர்
அறிஞர் அண்ணா உயிரியல் பூங்கா
சென்னை-48

டி ஐ பி ஆர் 332 செங்கை 87 ஏடிடி

## மின்அணு சாதனங்கள் உற்பத்தி: போலந்து ஆர்வம்

புதுடெல்லி. செப். 10 இந்திய அரசுடன் கூட்டாகச் சேர்ந்து இந்தியாவில் மின்அணு சாதனங்களை உற்பத்தி செய்ய போலந்து நாடு விருப்பம் தெரிவித்திருக்கிறது.

இது குறித்து போலந்து காதா இன்று டெல்லியில் மத்திய அரசு அதிகாரிகளுடன் பேச்சுவார்த்தை நடத்தினார்.

# பயங்கரவாதிகளை ஆதரிப்பதா?

# சீக்கிய மத குருக்கட்கு டெல்லி எச்சரிக்கை

புதுடெல்லி. செப். 10 பயங்கரவாதிகளை ஆதரிக்கும் சீக்கியமத குருக்களுக்கு மத்திய உள்துறை அமைச்சர் பூட்டாசிங் கடும் எச்சரிக்கை விடுத்தார்.

சீக்கிய மதகுருக்கள் 4 பேர் பயங்கரவாதிகளின் செயலை பகிரங்கமாக ஆதரித்துள்ளனர்.

பொற்கோவிலைச் சேர்ந்த உயர்மத குருக்கள் ஜஸ்வந்த்சிங், சுவிந்தர்சிங், காஷ்மீராசிங், பூரண சிங் ஆகியோர் நிருபர்களுக்குப் பேட்டி அளித்தனர். சீக்கியர்கள் மீது அடக்குமுறையை கைவிட்டு தேசிய ஒருமைப்பாடு பற்றி பேசுவது பயனற்றது என்று அவர்கள் கூறினர்.

அடிமைத் தளையிலிருந்து விடுபட சீக்கிய தீவிரவாதிகள் விரைவில் புதிய திட்டங்களை அறிவிப்பார்கள் என்று அவர்கள் கூறினர்.

எங்களுக்கு சுதந்திரம் வேண்டும். இந்தியாவுடன் சேர்ந்து இருக்கிற அளவில் சுதந்திரமா அல்லது இந்தியாவிலிருந்து விடுபட்டால் சுதந்திரமா என்பதை மத்திய அரசுதான் முடிவு செய்யவேண்டும். காலிஸ்தான் என்கிற லட்சியத்தை நோக்கி சீக்கிய இளைஞர்கள் நடைபோடுவதை உலகில் எந்த சக்தியும் தடுத்திட முடியாது என்றும் அந்த மதகுருக்கள் கூறினர்.

அகாலி தளக் கட்சியை நம்பக்கூடாது என்றும் அவர்கள் கூறினர்.

தீவிரவாதிகள் தொடுக்கும் கட்டங்களால் முடிந்த வரை வெற்றி பெறச் செய்வோம் என்றும் கூறினர்.

### சவாலே சமாளி

மதகுருக்களின் இந்த மிரட்டலை மத்திய உள்துறை அமைச்சர் பூட்டா சிங் கண்டித்தார். இது மத்திய அரசுக்கு விடப்பட்ட சவால் இதை சமாளிப்போம் என்று ஒரு அறிக்கையில் பூட்டா சிங் கூறினார்.

தீவிரவாதிகளின் பயங்கரவாதம், தேசவிரோதப் போக்கு ஆகியவற்றை முறியடிக்க அரசு உறுதி பூண்டுள்ளது என்றும் பூட்டாசிங் கூறியுள்ளார்.

தீவிரவாதிகளின் கை ஆயுதமாக மதகுருக்கள் தங்களை மாற்றிக் கொண்டிருப்பது வருந்தத்தக்கது என்றும் அவர் குறிப்பிட்டுள்ளார்.

### பொற்கோவிலில் தீவிரவாதிகள்

தீவிரவாதிகளை வெளிநாடுகள் ஆதரிக்கின்றன. அந்த ஆதரவுடன் பொற்கோவிலுக்குள் இருந்து கொண்டு அவர்கள் பிரிவினைவாதத்தில் ஈடுபட்டிருக்கிறார்கள் என்கிறார் பூட்டாசிங்.

நாட்டுப் பற்றுள்ள சீக்கிய மக்கள் இவர்களின் பிரிவினை வாதத்தை ஏற்கமாட்டார்கள். பிரிவினை வாத முயற்சியை அரசு முறியடித்தே தீரும் என்றும் பூட்டாசிங் கூறியுள்ளார்.

## இந்தியா-நேப்பாளம் பேச்சு வார்த்தை

காட்மாண்டு செப். 10- இந்தியாவுக்கும் நேப்பாளத்துக்கும் இடையே தொழில் மற்றும் வர்த்தகம் வளர்ச்சி அடைவது பற்றிய பேச்சுவார்த்தை காட்மாண்டுவில் துவங்கியது.

இந்தியக் குழுவிற்கு மத்திய வர்த்தகத்துறை செயலாளர் பிரேம்குமார் தலைமை வகிக்கிறார். நேப்பாளத்தைச் சேர்ந்த உயர் அதிகாரிகள் இதில் கலந்து கொள்கிறார்கள்.

## மறுமணம் செய்ததால் கேலி: பெண் தற்கொலை

கோவை. செப். 1- மறுமணம் செய்து கொண்டதை அடுத்தவர்கள் கேலி பேசியதால் ஒரு பெண் தற்கொலை செய்து கொண்டாள்.

கோவை வடவள்ளியில் வசிப்பவர் பாப்பா வயது 35 இவர் விதவை இவருக்கு 2 பையன்களும் ஒரு பெண் பிள்ளையும் உண்டு. இவர் தன் பெற்றோருடன் வசித்து வருகிறார். இவர் கணவன் முத்துசாமி காலமாகி 5 ஆண்டுகள் ஆகிறது. பாப்பா கட்டிட வேலை செய்து வருகிறார். இவர் கட்டிட வேலைசெய்கின்ற இடத்தில் கட்டிட தொழிலாளி வீராசாமி வயது 25 என்பவரை காதலித்தார். இருவரும் ரகசிய திருமணம் செய்து கொண்டு வடவள்ளியிலிருந்து ரத்தினபுரி என்ற ஊரில் வசித்து வந்தார்கள்.

பாப்பாவின் இரண்டு பையன்கள் அவள் பெற்றோரிடமும் பெண் பிள்ளையை மட்டும் தன்னிடமும் வைத்துக்கொண்டு பாப்பா-வீராசாமி ஜோடி 3 மாத காலமாக ரத்தினபுரியில் வாழ்ந்து வந்தார்கள். அப்பகுதியில் உள்ள மக்கள் இவரின் மறுமணம் குறித்து இழிவாக பேசியதன் காரணமாக பாப்பா மனம் உடைந்து விஷம் குடித்து விட்டார்.

பாப்பாவை கோவை அரசு மருத்துவமனையில் சிகிச்சைக்காக சேர்த்தார்கள். சிகிச்சை பலனளிக்காமல் பாப்பா பரிதாபமாக இறந்தார்.

போலீசார் வழக்கு பதிவு செய்து புலன் விசாரணை செய்து வருகின்றனர்.

### சமூக நலத் துறை

அரசாணை (நிலை) எண் 1293 நாள் 30-7-87

நிலம் கையகப்படுத்துதல் சட்டத்தின் 4-ஆம் பிரிவின் கீழான

## அறிவிக்கை

தென்னார்க்காடு மாவட்டம் கள்ளக் குறிச்சி வட்டம் சின்னசேலம் கிராமத்தில் அமைந்துள்ள கீழ் காணும் விவர அட்டவணையில் குறிப்பிட்டுள்ளதுமான நிலங்கள் ஒரு பொது நோக்கத்திற்காக அதாவது சின்னசேலம் கிராம நாவிதர்களுக்கு வீட்டு மனை வழங்குவதற்காக தேவைப்படுகின்றன என்று தமிழ்நாட்டு அரசுக்குத் தோன்றுவதால் அந்தப்படிக்கு 1894ம் ஆண்டைய நிலம் கையகப்படுத்துதல் சட்டத்தின் (மையச் சட்டம் 1-1894) 4ஆம் பிரிவின் (1) ஆம் உட்பிரிவின் விதித்துறைகளுக்கிணங்க தொடர்புடைய அனைவருக்கும் இதன் மூலம் அறிவிப்பு அளிக்கப்படுகிறது ஆகவே மேற்சொன்னச் சட்டத்தின் 4 ஆம் பிரிவின (2) ஆம் உட்பிரிவின் கீழ் வழங்கப்பட்டுள்ள அதிகாரங்கள் செலுத்தும் பொருட்டு கள்ளக் குறிச்சி ஆதிதிராவிடர் நல தனி வட்டாட்சியர் என்பவருக்கும் அவருடைய பணியாளர் தொழிலாளர் ஆகியோருக்கும் தமிழ்நாட்டு ஆளுநர் அவர்கள் இதனால் அதிகாரமளிக்கிறார்.

விவர அட்டவணை

மாவட்டம்: தென்னார்க்காடு வட்டம் கள்ளக்குறிச்சி கிராமம்: சின்னசேலம்

| புன்செய் (அ) நன்செய் புல எண் | நிலச் சொந்தக்காரர் (பட்டாதாரர்) அல்லது அனுபவதாரர் பெயர் | கையகப்படுத்த உள்ள பரப்பு (ஹெக்டேரில்) | கிணறு அல்லது பிற கட்டடங்கள் மரங்கள் இருப்பின் குறிப்பு |
|---|---|---|---|
| புன்செய் 339 1ஏ | மாராயி அம்மாள் மற்றும் பலர் | 0,93,5 ஹெக் | |

சோ குமாரசாமி
அரசுத் துணைச் செயலாளர்

டி ஐ பி ஆர் 344 தெ ஆ 87 எலிகண்ட்

# இந்தியா - இலங்கை நலனுக்கான உடன்பாடு: இலங்கை மந்திரி கருத்து

புதுடெல்லி. செப் 10- இந்தியா - இலங்கை ஆகிய இரு நாடுகளின் முன்னேற்றத்துக்கும் பாதுகாப்புக்கும் முன்னோடியாக இந்திய-இலங்கை ஒப்பந்தம் அமைந்திருக்கிறது என்று இலங்கை அமைச்சர் ரோனிடிமெல் பாராட்டுத் தெரிவித்தார்.

இந்திய - இலங்கை கூட்டுக்கமிஷனின் கூட்டம் புதுடெல்லியில் நடைபெறுகிறது. கடந்த பல ஆண்டுகளாக நிறுத்தப்பட்டிருந்த இந்தக் கூட்டுக் கமிஷன் நடவடிக்கைகள் இந்தியா-இலங்கை ஆகிய நாடுகளுக்கிடையே கடந்த ஜூலை 29ந் தேதி ஏற்பட்ட ஒப்பந்தத்தைத் தொடர்ந்து புத்துயிர் பெற்றுள்ளது.

கடந்த 2 நாட்களாக புதுடெல்லியில் இந்தக் கூட்டுக் கமிஷன் கூட்டம் நடைபெற்றுவருகிறது. இலங்கை நிதித்துறை அமைச்சர் ரோனிடிமெல மற்றும் அதிகாரிகள் கலந்து கொள்கிறார்கள்.

இலங்கை அமைச்சர் ரோனி டிமெல்லுக்கு மத்திய நிதி அமைச்சர் என் டி திவாரி விருந்து அளித்தார்.

அப்போது உரையாற்றிய இலங்கை அமைச்சர் ரோனி டிமெல் கூறியதாவது:

இரு நாடுகளுக்கும் இடையே ஏற்பட்டுள்ள ஒப்பந்தம் ஒரு மகத்தான சாதனை என்றே சொல்ல வேண்டும்.

### வளமாக்கும் முன்னோடி

இந்தியா - இலங்கை ஆகிய இருநாடுகளின் முன்னேற்றம் பாதுகாப்பு ஆகியவற்றிற்கு உறுதுணையாக இந்த ஒப்பந்தம் அமைந்துள்ளது. இரு நாடுகளின் வாழ்வை வளமாக்கும் ஒரு முன்னோடி திட்டம்தான் இந்த ஒப்பந்தம். இதை எவ்வளவு புகழ்ந்து பாராட்டினாலும் அது இலங்கைக்கு பெருமை தரக்கூடியது.

ஒப்பந்தத்தை செயல்படுத்துவதில் ஒருசில தடங்கல் ஏற்படுவது சகஜமே. தடங்கல்களைத் தெரிந்து வெற்றிவாகை சூடுவோம் என்பது திண்ணம்.

இவ்வாறு ரோனிடிமெல் கூறினார்.

இலங்கைக்கு 45 கோடி ரூபாய் பொருளாதார உதவி செய்ய இந்தியா உறுதியளித்திருக்கிறது. இதற்கான ஒப்பந்தமும் கையெழுத்தானது.

இதில் மத்திய நிதியமைச்சர் என் டி திவாரி இலங்கை நிதி அமைச்சர் ரோனிடிமெல் ஆகியோர் கையெழுத்திட்டனர்.

இலங்கை மக்களின் பொருளாதார முன்னேற்றத்துக்கு இந்தியா அனைத்து உதவிகளையும் அளிக்கும் என மத்திய அமைச்சர் என் டி திவாரி உறுதி அளித்தார்.

### சமூக நலத்துறை

அரசாணை [நிலை], எண் 1389 நாள் 12-8-87

நிலம் கையகப்படுத்துதல் சட்டத்தின் 4ம் பிரிவின் கீழான விளம்பல்

## அறிவிக்கை

தென்னார்க்காடு மாவட்டம், சிதம்பரம் வட்டம் இளநாங்கூர் கிராமத்தில் அமைந்துள்ளதும் கீழ்காணும் விவர அட்டவணையில் குறிப்பிட்டுள்ளதுமான நிலங்கள் ஒரு பொதுநோக்கத்திற்காக அதாவது இளநாங்கூர் கிராமத்தில் ஆதிதிராவிடர்களுக்கு மயானம் அமைப்பதற்கு தேவைப்படுகின்றன என்று தமிழ்நாடு அரசுக்குத் தோன்றுவதால் அந்தப்படிக்கு 1894 ஆம் ஆண்டைய நிலம் கையகப்படுத்துதல் சட்டத்தின் [மையச் சட்டம் 1 1894] 4ஆம் பிரிவின் 1 ஆம் உட்பிரிவின் விதித்துறைகளுக்கிணங்க தொடர்புடைய அனைவருக்கும் இதன்மூலம் அறிவிப்பு அளிக்கப்படுகிறது ஆகவே மேற்சொன்ன சட்டத்தின் 4ஆம் பிரிவின் (2) ஆம் உட்பிரிவின் கீழ் வழங்கப் பட்டுள்ள அதிகாரங்களைச் செலுத்தும் பொருட்டு சிதம்பரம் ஆதிதிராவிடர் நல தனி வட்டாட்சியருக்கும் அவருடைய பணியாளர். தொழிலாளர் ஆகியோருக்கும் தமிழ்நாடு ஆளுநர் அவர்கள் இதனால் அதிகாரமளிக்கிறார்.

விவர அட்டவணை

மாவட்டம்: தென்னார்க்காடு வட்டம் சிதம்பரம் கிராமம்: இளநங்கூர்

| புன்செய் அல்லது நன்செய் என்ற குறிப்புடன் புல எண் | நிலச் சொந்தக்காரர் (பட்டாதாரர்) அல்லது அனுபவதாரர் பெயர் | கையகப் படுத்த உள்ள பரப்பளவு (ஹெக்டேரில்) | கிணறு அல்லது பிற கட்டிடங்கள்? | (மரங்கள் கட்டிடங்கள் இவை இருப்பின் குறிப்பு) |
|---|---|---|---|---|
| 1 | 2 | 3 | 4 | 5 |
| புன்செய் 90-5ஏ | கனகசபை மற்றும் பலர் | 0,15,0 | | |

சோ. குமாரசுவாமி
அரசு துணைச்செயலாளர்

டி ஐ.பி ஆர் 346-தெ ஆ 87 எலிகண்ட்

### ஆலோசனைக் கூட்டம்

வேலூர் செப். 10- வடாற்காடு மாவட்ட தொழிற்சங்கத்தின் 5 வது பேரவைக் கூட்டம் வரும் 11 9 87 வெள்ளிக்கிழமை மாலை 2 மணிக்கு மகா வெங்கிடேசன் தலைமையில் வேலூர் பில்டர் பெட் ரோடு (தெற்கு காவல் நிலையம் அருகு) ஆசிரியர் இல்லத்தில் நடைபெறும் மாவட்ட ஆலோசனை கூட்டத்தில் அண்ணா கைத்தறி நெசவு தொழிலாளர் சங்க பேரவை உறுப்பினர்கள் ஒன்றிய நிர்வாகிகள் கிளை நிர்வாகிகள் (கிளை அமைப்பாளர்கள்) ஆகியோர் வருகை தந்து சிறப்பிக்க வேண்டும் என அண்ணா கைத்தறி நெசவாளர் சங்க வடாற்காடு மாவட்ட செயலாளர் இரா பச்சியப்பன் கேட்டு கொண்டுள்ளார்.

### அண்ணா பால்உற்பத்தியாளர் இணைய நிர்வாகிகள்

சென்னை செப் 10- தமிழ்நாடு பால் உற்பத்தியாளர்கள் கூட்டுறவு இணைய அண்ணா தொழிலாளர்கள் சங்கத்தின் பொது உறுப்பினர்கள் கூட்டம் சென்னையில் நடைபெற்றது.

மேற்படி சங்கத்தின் பொது உறுப்பினர்கள் கூட்டத்தில் 1987-88-ம் ஆண்டுக்கான புதிய நிர்வாகிகள் தேர்ந்தெடுக்கப்பட்டனர்.

தலைவராக சிம்சன் க புருடோத்தமனும் பொது செயலாளராக எம் ஜானும் பொருளாளராக எல் சூரியகுமாரும் இணைச் செயலாளர்களாக உஸ்மான் அலியும் சோமசுந்தரமும் துணைத்தலைவர்களாக எஸ் கோதண்டன் பரசுராமன் துணைச் செயலாளர்களாக பிரான்சிஸ் ஆல்பர்ட்டும் தனசேகரனும் தேர்ந்தெடுக்கப்பட்டனர்.

# திருச்சியில் புதிய பால் பண்ணை

திருச்சி. செப் 10- திருச்சியில் புதிய பால் பண்ணை 3 கோடியே 20 லட்ச ரூபாய் செலவில் அமைக்கப்பட இருப்பதாக திருச்சி பால் வள தலைவர் பாளை திருநாவுக்கரசு கூறினார். இதுபற்றி அவர் நிருபர்களிடம் கூறியதாவது:-

திருச்சி மாவட்டத்தில் மூன்றாவது பால் பெருக்குத் திட்டத்திற்காக 6 19 கோடி ரூபாய் ஒதுக்கப்பட்டுள்ளது இத்திட்டம் 1988 முதல் 1992 முடிய நடைபெறவுள்ளது இத்திட்டம் தேசிய பால்வள வாரியத்தின் உதவியுடன் இந்தியப் பால்வள கழகத்தின் அனுமதிக்கு அனுப்பப்பட்டுள்ளது ஆனால் இப்பணியை திருச்சி மாவட்டத்தில் ஏற்கனவே தொடங்கி இப்பணிக்கான 1 இலட்ச ரூபாயை பால்வள வாரியத்திடமிருந்து பெற்றுள்ளது.

3 கோடியே 20 லட்ச ரூபாய் செலவில் திருச்சியில் புதிய பால் பண்ணை 1 இலட்சம் லிட்டர் கொள்ளளவு திறனுக்கு நிறுவப்படவுள்ளது. இதற்காக மூன்று குளிர்வு நிலையங்களை கரூர், பெரம்பலூர் ஜெயங்கொண்டம் ஆகிய இடங்களில் நிறுவப்படவுள்ளது.

### புதிய பண்ணை

பால் கொள்முதலை 3 ஆயிரம் லிட்டரிலிருந்து 1 லட்சம் லிட்டராக உயர்த்துவது பால் விற்பனையை 80 ஆயிரம் லிட்டராக உயர்த்துவது போன்ற திட்டங்களை செயல்படுத்த திட்டமிடப்பட்டுள்ளது.

இவ்வாறு பாளை திருநாவுக்கரசு கூறினார். திருச்சி பால்வள நிர்வாக இயக்குனர் அருமைராசு உடனிருந்து திட்டங்களை விளக்கிக் கூறினார்.

### தமிழ் நாட்டரசு
### வேளாண்மைத் துறை

அரசாணை [நிலை] எண் 1088 நாள்: 8-6-87

நிலம் கையகப்படுத்துதல் சட்டத்தின் 6-ஆம்பிரிவின் கீழான விளம்பல்

## அறிவிக்கை

கீழ்க்காணும் விவரஅட்டவணையில் குறிப்பிடப்பட்டுள்ள நிலங்களை ஒரு பொது நோக்கத்திற்காகக் கையகப்படுத்த வேண்டியுள்ளதென்று தமிழ்நாடு அரசு மனநிறைவடைந்திருப்பதோடு அந்நிலங்களுக்கு வழங்கப்பட வேண்டிய இழப்பீட்டுத்தொகைமுழுவதும் பொது வருவாய்களிலிருந்து செலுத்தப்பட வேண்டும் என்றும் அவ்வரசால் ஏற்கனவே முடிவெடுக்கப்பட்டுள்ளது. ஆகவே 1894 ஆம்ஆண்டைய நிலம்கையகப்படுத்துதல் சட்டத்தின் (மையச்சட்டம் 1 1894)6 ஆம் பிரிவின்படி தமிழ்நாடு ஆளுநர் அவர்கள்கீழ்க்காணும் விவரஅட்டவணையில் குறிப்பிடப்பட்டுள்ளதும் 1.010 ஹெக்டேர் கொண்ட அதே அல்லது சற்று கூடுதலாகவோ குறைவாகவோ பரப்பளவு உள்ளதுமான நிலங்கள்ஒரு பொது நோக்கத்திற்காக. அதாவது கண்ணந்தோட்டம் பரசுராம் வழியாக பூலாம்பாளையம் சாலையில் கி மீ 2 4லிருந்து வெள்ளித் திருப்பூர் கெட்டிபட்டி சாலையில் கி மீ 20-4 வரை அபிவிருத்திக்காக தேவைப்படுகின்றன என்று இதன் மூலம் அறிவிக்கிறார்.

இந்நிலங்களின் வரைபடங்கள் பவானி கரும்புச் சாலை வளர்ச்சித் திட்ட நிலஎடுப்பு தனி வட்டாட்சியர் அலுவலகத்தில் வைக்கப்பட்டுள்ளன. அவற்றை அலுவலகப்பணி நேரத்தில் எப்போது வேண்டுமானாலும் பார்வையிடலாம்.

விவர அட்டவணை

மாவட்டம் பெரியார் வட்டம் பவானி கிராமம் வெள்ளித் திருப்பூர்

| புல எண் | நில சொந்தக்காரர் அல்லது அனுபவதாரர் பெயர் | கையகப் படுத்த உள்ள பரப்பு ஹெக்டேர் | குறிப்புகள் |
|---|---|---|---|
| 559-1ஏ1 | கே நாச்சிமுத்து கவுண்டர் | 0 19 0 | பனைமரம் |
| 574-2 | வி பி. அர்ஜுனன் | 0.25.0 | " |
| 581 1பி | " | 0 03 0 | " |
| 581-1சி | " | 0.03.5 | " |
| 581 2பி | ஆணையர். ஊராட்சி, ஒன்றியம் அம்மாபேட்டை | 0 01.5 | " |
| 582 3 | வி பி அர்ஜுனன் & கே நாச்சிமுத்து கவுண்டர் | 0.09.0 | |
| 583 2 | வி பி அர்ஜுனன் | 0 08 0 | பனைமரம் 6 |
| 584 2 | " | 0 07 0 | பனைமரம் 1 |
| 585 2 | டி என் அழகுராஜ் | 0 19 5 | " |
| 618 1ஏ | பெரியசாமி | 0.04 0 | " |
| 618 2பி | டி என் அழகுராஜ் | 0.02.5 | " |
| 621 2பி | அ. முத்துச்சாமி கவுண்டர் | 0 01 0 | " |
| 621 3ஏ | . | 0.01.0 | " |
| | மொத்தப்பரப்பு | 1 01 0 | ஹெக்டேர் |

சி சௌந்தரராஜன்
அரசு துணைச்செயலாளர்
வேளாண்மைத்துறை

DIPR 291 Periyar 87 Adimtix

### பால் நிலாவில் ஏர் ஓட்டுவோம்

# நிலா மீது விவசாயம்! நெல்சாகுபடி செய்யலாம்

வாஷிங்டன் செப். 9 சந்திரனில் தாவரங்களை பயிரிட முடியும் உணவு உற்பத்தி செய்ய முடியும் என்று இந்திய விஞ்ஞானி வெங்கடேசுவரன் தெரிவித்துள்ளார்.

நிலாவில் தாவரங்களைப் பயிரிட முடியுமா? 'முடியும்' என்கிறார் அமெரிக்காவில் இதுபற்றி ஆய்வு நடத்தி வரும் இந்திய விஞ்ஞானி எஸ்.வெங்கடேசுவரன்.

நிலாவிலுள்ள மண்ணைப் போன்ற தன்மைகளைக் கொண்ட செயற்கை மண்ணில் தற்போது இவர் தாவரங்களைப் பயிரிட்டு ஆய்வு நடத்தி வருகிறார்: இதற்காக அமெரிக்க விண்வெளி நிறுவனம் நாஸா இவருக்கு 60 ஆயிரம் டாலர்கள் மானியம் அளித்துள்ளது.

நிலாவில் மனிதன் முதன் முதலில் குடியேறி ஓர் இருப்பிடத்தை அமைத்துக் கொள்கிறான் என்று வைத்துக் கொள்வோம் நிச்சயம் நடக்கத்தான் போகிறது. அப்போது அங்கு அவனுக்கு உணவு தேவைப்படும் எனவே நிலாவில் அவன் உணவு தானியங்களைப் பயிரிட முடியுமா என்ற ஆய்வு நடத்த வேண்டியது அவசியமாகியுள்ளது என்று வெங்கடேசுவரன் கூறுகிறார்.

'நிலாவில் குடியேறும் மனிதனுக்கு விண்வெளிக் கலங்கள் மூலமாகவா உணவு தானியங்களை அனுப்பி வைக்க முடியும்; என்றாலும் கூட, தாவரங்கள் எதுவுமே வளராத ஓரிடத்தில் வசித்தால் வாழ்க்கையே வெறுத்துப் போய்விடும். இதற்காகவும் அவன் நிச்சயம் அங்கே உணவு தானியங்களைப் பயிரிட்டே ஆகவேண்டும்'' என்று அவர் குறிப்பிட்டார்.

''தாவரங்கள் வளருவதற்குப் போதுமான பிராணவாயு நிலவில் இல்லை அன்றியும் நிலவு மண்ணில் குரோமியம் போன்ற மூலங்கள் அதிகமாக உள்ளன.

இவ்வளவு இடர்ப்பாடுகள் இருந்தும். நிலவில் உணவு தானியச் சாகுபடி செய்வது நிச்சயம் சாத்தியமாகும்'' என்று நம்பிக்கையுடன் கூறினார் வெங்கடேசுவரன் ''சுற்றுப் புறச் சூழ்நிலைப் பாதுகாப்புக் கூடாரங்களை அமைத்துக் கொண்டு, அதற்குள் தாவரங்களை வளர்க்கமுடியும்'' என்று அவர் சொன்னார்.

நிலவு மண்ணைப் போன்ற இரசாயனத் தன்மைகளைக் கொண்ட செயற்கை மண்ணில், நெல் கோதுமை பீன்ஸ் சோயாபீன்ஸ். முள்ளங்கி போன்றவற்றை விளைவிப்பது பற்றி வெங்கடேசுவரன் ஆய்வு நடத்துகிறார்; நிலவுக்குச் சென்ற அமெரிக்க விண்வெளிக்கலங்கள் போதுமான அளவுக்கு நிலவு மண்ணைக் கொண்டு வராததால் தான் அவரது ஆராய்ச்சிகளுக்கு நிலவு மண்ணை நேரடியாகப் பயன்படுத்திக் கொள்ள முடியவில்லை. என்று அவர் தெரிவித்தார்.

பாக்டீரியாக்கள் வைரஸ்கள் போன்ற நுண்கிருமிகள் எவையும் அண்ட முடியாத சுத்தமான சூழ்நிலையில் நன்கு பாதுகாக்கப்பட்ட சோதனைச்சாலைகளில் வெங்கடேசுவரன் இந்த ஆய்வுகளை நடத்திக் கொண்டுள்ளார். சோதனைக்குழாய்கள், ஜாடிகள் குப்பிகள், போன்றவற்றில் இந்தத் தாவரங்கள் வளர்க்கப்படுகின்றன. வெங்கடேசுவரன் கோளாலத்தைச் சேர்ந்தவர்.

Edited and published by K. RAVINDRAN on behalf of Thangamani Publication and Printed by all India Anna D. M. K. Perarignar Anna Trust Press at 34, Nelson manickam Road, MADRAS - 600 029.